REGD. No. TN MS (C) 244 ✽ ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone; 420212 4 பக்கம் விலை 35 காசு

இலட்சியவாதி

இலட்சியவாதிகள் ஒரு நாட்டிற்குக் கிடைக்கக்கூடிய ஒப்பற்ற செல்வங்கள்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர் : எம். ஜி. ஆர்

திருப்தி

மக்களுக்கு சாந்தியும் திருப்தியும் ஏற்பட வேண்டுமானல், பொதுவுடைமைத் தத்துவ ஆட்சி ஏற்பட்டே ஆக வேண்டும்.

-தந்தை பெரியார்

மலர் 5 சென்னை 21—4—1981 செவ்வாய் வெளியூர் 22—4—1981 புதன் இதழ் 182

## மத்திய அமைச்சர் ஆர். வி. சாமிநாதன், இ. காங்கிரஸ் தலைவர் எம். பி. எஸ். புரட்சித் தலைவருடன் 30 நிமிட ஆலோசனை

சென்னை, ஏப். 21- சென்னை கோட்டையில் இன்று காலை மத்திய விவசாய துணை அமைச்சர் ஆர். வி. சுவாமிநாதன், தமிழக இந்திரா காங்கிரஸ் தலைவர் எம். பி. சுப்பிரமணியம் ஆகியோர் முதல்வர் புரட்சித்தலைவரை சந்தித்து 30 நிமிட நேரம் பேசினுர்கள்.

இச்சந்திப்பிற்கு பிறகு மத்திய அமைச்சர் ஆர். வி. சுவாமிநாதன் நிருபர்களிடம் கூறியதாவது:-

ராமநாதபுரம் கலவரப் பகுதியை நான் சென்று பார்த்தேன். அது சம்பந்தமாக எனது கருத்துக்களை முதல்வரிடம் கூறினேன்.

மாநில குற்ற இயல் பிரிவினர் அப்பகுதிக்குச் சென்று உண்மையைக் கண்டறிய வேண்டும். பாதிக்கப்பட்ட 20கிராமங்களிலும்அமைதி நிலை ஏற்பட சில போலீசாரை சில மாதங்களுக்கு பாதுகாப்பு போட வேண்டும் என முதல்வரை கேட்டுக்கொண்டேன்.

ராமநாதபுரத்தில் ஏற்பட்ட கலவரத்திற்கும், முன்பு முதுகுளத்தூரில் ஏற்பட்ட பிரச்சினைக்கும் சம்பந்தம் இல்லை.

வறட்சிநிவாரணத்திற்கு என்னென்ன வேண்டுமோ அதை மாநிலஅரசு செய்து வருகிறது.

மத்தியகுழு தனது அறிக்கையை டெல்லியில் கொடுத்திருக்கும் என நினைக்கிறேன்.

அதைஆராய்ந்து அமைச்சரவை முடிவெடுக்கும்.

தமிழ் நாட்டில் அரிசி போதவில்லை என்கிருர்கள். இது குறித்து டெல்லி சென்றவுடன் கவனிப்பேன்.

தமிழ்நாட்டைச்சேர்ந்த நான் இங்கு என்ன தேவையோ அதைப் பெற்றுத் தருவேன்.

நாட்டில் ஏற்பட்டிருக்கும் விலையுயர்வை குறைப்பதுபற்றி பிரதமர் இந்திரா தீவிரமாக முயற்சித்து வருகிருர்.

இவ்வாறு அமைச்சர் ஆர். வி. சுவாமிநாதன் கூறினுர்.

மே தின விழா:

## கடலூரில் புரட்சித்தலைவர் பேசுகிருர்!

சென்னை, ஏப். 21— தொழிலாளர் தினமான மே தின விழாவை சிறப்பாக கொண்டாட கழகம் ஏற்பாடு செய்துள்ளது.

முதல்வர் புரட்சித்தலைவர் கடலூரில் நடைபெறும் கழக மே தின விழா கூட்டத்தில் கலந்து கொண்டு பேசுகிருர். இக்கூட்டத்தில் கழக பொதுச் செயலாளர் ப. உ. ச.வும் பேசுகிருர்.

மற்றும் தமிழகமெங்கும் நடைபெறும் கழக மே தின விழா பொதுக் கூட்டங்களில் அமைச்சர்கள் மற்றும் கழக முன்னணியினர் பங்கேற்கிருர்கள்.

முதல்வர் புரட்சித்தலைவர் விருப்பப்படியும், கழக பொதுச்செயலாளர் ப.உ.ச.வின் வேண்டுகோளின் படியும், மே தின விழாவை சிறப்பாக கொண்டாடுமாறு கழகத்தினரை, கழக கொள்கை பரப்புச் செயலாளர் திருப்பூர் மணிமாறன் கேட்டுக்கொண்டுள்ளார்.

மே தினவிழா கூட்டத்தில் கலந்து கொள்ள கடலூர் வரும் முதல்வர் புரட்சித்தலைவரை வரவேற்க கழகத்தினரும், அண்ணா தொழிற்சங்கப் பேரவையினரும் சிறப்பான ஏற்பாடுகளை செய்துவருகிருர்கள்.

நடிகர் திலகம்

சிவாஜி கணேசன் கலைக் குழு

நெ. 57, அருணாசல நாய்க்கன் தெரு, சென்னை-2

| | |
|---|---|
| தலைவர் | செயலாளர் |
| K. C, மாரியப்பன் | சிதம்பரம் |
| உப தலைவர் | பொருளாளர் |
| K. நாகப்பன் | K. குப்புசாமி |

தேதி... 13-4-81

திரு.

காளிமுத்து (அமைச்சர்) அவர்களுக்கு

[illegible]

இப்படிக்கு,
சிவாஜி ரசிகன்
[illegible]
13/4/81

அமைச்சர் காளிமுத்துவுக்கு சிவாஜி ரசிகர் எழுதிய கொலைமிரட்டல் கடிதம்.

## "தாய்" வார ஏடு: வலம்புரி ஜான் ஆசிரியர்

சென்னை,ஏப். 21-"தாய்" என்னும் தமிழ் வார ஏட்டின் வெளியிடுபவராகவும் அச்சிடுபவராகவும் திரு.கே. ரவீந்திரன்இன்று சென்னை பெருநகர தலைமை நீதிபதி முன் தம்மை பதிவு செய்து கொண்டார்.

"தாய்" வார ஏட்டின் ஆசிரியராக திரு. வலம்புரி ஜான் பொறுப்பேற்றுள்ளார்.

ஆதரவு 17: எதிர்ப்பு 9

## மேலவையிலும் மதுவிலக்கு திருத்த சட்டம் நிறைவேறியது

சென்னை, ஏப். 21. மதுவிலக்குத் திருத்தச் சட்டம் மேலவையிலும் நிறைவேறியது. சட்டத்துக்கு ஆதரவாக 17ஓட்டுகளும், எதிராக 9 ஓட்டுகளும் கிடைத்தன.

மேலவையில் மதுவிலக்கு திருத்தச் சட்ட விவாதத்திற்கு பதிலளித்து அமைச்சர் எஸ். டி. எஸ். கூறியதாவது:-

அரசு வருமானத்தை அதிகப்படுத்தத்தான் மதுவிலக்கை தளர்த்தி உள்ளது என பலர் கருத்து சொன்னுர்கள். வருவாயை அதிகப்படுத்த மட்டும் இந்த சட்டம் கொண்டு வரப்படவில்லை. வருவாய் மட்டும் தேடுவது மன்னராட்சியில் தான் நடக்கும். இது மன்னர் ஆட்சிஅல்ல.எவ்வளவு வருமானம் வரும் எனஇந்த அரசு இதுவரைஎண்ணவே இல்லை. எவ்வளவு சங்கடங்களுக்குப்பிறகு இச்சட்டம் கொண்டுவரப்பட்டுள்ளது என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். இந்த நாட்டின் நலனில் முதல்வர் புரட்சித்தலைவருக்கு மிகவும் அக்கறையுண்டு. இந்த முடிவு எடுக்கப்பட்டிருக்கிறது என்ருல் எவ்வளவு வேதனையுடன்எடுக்கப்பட்டுள்ளதுஎன்பதைப்புரிந்து கொள்ளவேண்டும்.

நாட்டில் நடக்கிற அக்கிரமங்கள், கள்ளச்சாராயங்கள் போன்றவைகளில் இருந்து மக்களை எப்படிக் காப்பாற்றுவது என சிந்தித்துப் பார்த்து இந்த முடிவு எடுக்கப்பட்டுள்ளது.

### நல்ல முடிவு அல்ல

இந்த முடிவு நல்ல முடிவு எனஇந்தஅரசு எப்போதும் சொல்ல வில்லை.

வேறு வழியில்லாமல் மிகவும் வேதனையுடன் கொண்டு வரப்பட்டது தான் இச்சட்டம்.

கள்ளச் சாராயத்தைப் பயன்படுத்தி பணம் சம்பாதிப்பது காய்ச்சாதவர்களை பணம் கொடுத்து கள்ளச் சாராயம் காய்ச்ச சொல்லுவது அதன்மூலம் பணம் சம்பாதிக்கும் இச்சமுதாயத்தை கெடுப்பவர்களின் முதுகெலும்பை முறிக்க வேண்டும்என்ற எண்ணத்துடன் அவற்றை கட்டுப்படுத்த வேண்டும் என்ற எண்ணத்துடன் மன வேதனையுடன் இம்முடிவு எடுக்கப்பட்டுள்ளது.

இந்த சட்டம் விரைவில் அமுல் படுத்தப்படும் மதுக்கடைகள் ஏலம்விடப்படும்.

இவ்வாறு அமைச்சர் எஸ்.டி. எஸ். கூறினுர்.

### வாக்கெடுப்பு

இதன்பிறகுவாக்கெடுப்பு நடந்தது.

இச்சட்டத்திற்கு ஆதரவாக 17 ஓட்டுகளும் எதிர்த்து 9 ஓட்டுகளும் கிடைத்தன.

உறுப்பினர் முத்துசாமி நடுநிலை வகித்தார்.

பி.ஆர். லட்சுமி காந்தன் தாமஸ் வாக்கெடுப்பில் கலந்து கொள்ளவில்லை.

அமைச்சர் ஹண்டே தகவல்

## தாலுகா ஆஸ்பத்திரியில் பல் மருத்துவ பிரிவு

சென்னை, ஏப். 21 சட்டசபையில் இன்று உறுப்பினர்கள் கேட்ட கேள்விக்கு பதிலளித்து அமைச்சர் ஹண்டே கூறியதாவது!

காஞ்சிபுர மாவட்ட தலைமை மருத்துவமனையில் சித்தமருத்துவபகுதி திறக்கப்பட்டு நோயாளிகள் தங்கி சிகிச்சை பெற படுக்கை வசதிசெய்யப்பட்டுள்ளது.

பல் மருத்துவத்திற்காக தனிப்பிரிவுகள் இப்பொழுது தமிழ்நாட்டில் உள்ள மாவட்ட மருந்துவமனைகள் அனைத்திலும் செயல்பட்டு வருகின்றன. தாலுகா மருத்துவமனைகளுக்கும் பல் மருத்துவமனை அமைக்கப்படும்.

இவ்வாறு அமைச்சர் டாக்டர் ஹண்டே கூறினுர்.



## உறுதி அளித்துவிட்டார், பொறுத்திருப்பீர்

ப. உ. ச. கடிதம்

பேரன்புடையீர்,

"சர்க்கரை விலை ஏறினுல் வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படும். உள்நாட்டில் சர்க்கரை விலை தாறுமாருக ஏறிக் கொண்டிருக்கிறது. காரணம் தெரியவில்லை. அதன் விலையைக் கட்டுக்குள் கொண்டு வர முயற்சிகள்எடுக்கப்படும். விலை ஏற்றத்திற்கு யாராவது காரணமா என்று பரிசீலிக்கப்படும். அடுத்த ஆண்டிற்கு அரசு போதிய அளவு கையிருப்பு வைக்க நடவடிக்கை எடுக்கப்படும். வரும் ஆண்டு 52 லட்சம் டன் சர்க்கரை உற்பத்தியாகும்"—இந்தத் தகவல்களை நாடாளுமன்றத்தில் விவசாயத்துறை அமைச்சர் திரு. ராவ் பீரேந்திரசிங் அவர்கள் தெரிவித்துள்ளார்கள்.

உற்பத்தியாகும் மொத்தசர்க்கரையையும் அரசுதன் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வருகிறது. அரசு ஆணை

(2-ம் பக்கம் பார்க்க)

சினிமா செய்திகள்

(4-ம் பக்கம்)

ஏழைகளுக்கு

# இலவச கருவிகள்: நிதியமைச்சர் நாவலர் வழங்குகிறார்



காஞ்சிபுரம், ஏப். 21- செங்கற்பட்டு தர்மராஜா கோவில் மைதானத்தில் நாளை (22-ந்தேதி) ஏழை மக்களுக்கு இலவச கருவிகள் வழங்கும் விழா மாவட்டக் கலெக்டர் அரவிந்த் தலைமையில் நடக்கிறது.

நிதியமைச்சர் டாக்டர் நாவலர் விழாவில் கலந்து கொண்டு தொழில் கருவிகளை வழங்குகிறார்,

# சிவகாசியில் துணை பணிமனை

சென்னை, ஏப். 21- சிவகாசியில்பாண்டியன்போக்குவரத்துக்கழக துணை பணிமனை அமைக்கும் திட்டம் உள்ளது. சிவகாசி பஸ் நிலையத்திலிருந்து ஒரு கிலோ மீட்டர் தூரத்தில அமைக்கப்படும் என்று அமைச்சர் முத்துசாமி சட்டசபையில் தெரிவித்தார்.

# குரங்கு மனேகரனைக் கூத்தாட வைக்கும் கருணாநிதி:ப.உ.ச.தாக்கு

**சென்னை. ஏப் 21 குரங்கு புத்தி படைத்த மனேகரனை விட்டு புரட்சித் தலைவரைத் தாக்கிப் பேசச்சொல்லி, அதைப் பத்திரிகையில் வெளியிட்டு பரவசப்படுகிறார் கருணாநிதி என்று பொதுச் செயலாளர் ப உ ச கூறினர்.**

சிந்தாதிரிப்பேட்டை சிங்கண்ணச்செட்டித்தெருவில் நடந்த மாபெரும் கழகக்கூட்டத்தில் கழகப் பொதுச் செயலாளர் ப. உ. ச. பேசினர்.

கூட்டத்திற்கு சேப்பாக்கம் பகுதிச் செயலாளர் மு. அன்புத்தம்பி தலைமை வகித்தார்.

இந்தப் பொதுக்கூட்டத்தில் சென்னை மாவட்ட செயலாளர் ஜேப்பியார், எம்·எல்,சி. வழக்கறிஞர் வேலூர் நாராயணன், திருவை அண்ணாமலை, திருப்பத்தூர்ராமமூர்த்தி, புலவர் அறிவுடை நம்பி' கழக மகளிர் பிரிவு செயலாளர் பா. வளர்மதி, கு. க. செல்வம் ஆகியோர் பேசினர்கள்.

பெ. புகழேந்தி, கே. நீலகண்டன், கோவை கணேசன், பா.சம்பத், டி. எம். எம். மொய்தீன், இரா. குப்புசாமி, டி. சகுந்தலா, சி.பி. நாராயணன், தி.சண்முகம். பா. லோகநாதன், பி.எம்.ஏ.ஜலில் ஆகியோர் இந்தக் கூட்டத்தில் பேசினர்கள். கே.ஆர்.சந்திரன் நன்றி கூறினா.

ப. உ. ச. பேசுகையில் கூறியதாவது:-

இங்கே ஜேப்பியார் அவர்கள் பேசும்போது கோபம் கொப்புளிக்க ஆத்திரப்பட்டு மனேகரனுக்கு பதில் அளித்தார்.

கருணாநிதியின் ஆருயிர் இளவல்- ஒரு காலத்தில் கண்ணாடிமாளிகைக்காரர்- என்று சொல்லப்பட்டவர் குட்டிக் குரங்கு தாய்க் குரங்கு என்றெல்லாம் பேசி இருக்கிறார்.

## மனேகரனின் குரங்கு புத்தி

யார்யாருக்குளன்னஎன்ன புத்தி இருக்குமோ அந்த மாதிரித்தான் பேசுவார்கள்.

குரங்கு மனம் படைத்த காரணத்தால் மனேகரன் அப்படிப் பேசியிருக்கிறார்.

ஏதோ பெரிய மனிதர் சின்னபுத்திதனமாக இப்படி பேசியிருந்தால் மன்னித்துவிடலாம்.

ஆனல் பாவம் மனேகரன் அவரை இப்படிப் பேச வைத்து மகிழ்பவர் கருணாநிதி.

## மனேகரன் யோக்யதை

மனேகரனை 1956-ம் ஆண்டு சேலம் மாநாட்டில் பார்த்தேன். அப்போது எப்படி இருந்தார். இப்போது எப்படி இருக்கிறார். எனக்குப்பொருமை இல்லை.

அவரது நாக்கில் தடிப்பான வார்த்தை வருவது வழக்கம். அதனல் தான் அவர் கையில் கைத்தடி வைத்திருக்கிறார்.

மத்திய மந்திரியாக இருந்த சி. சுப்பிரமணியத்தைப் பார்த்து "சாரிட்டிபாய்" என்று பேசியவர் தான் இந்த மனேகரன். அப்படிப் பேசியதால் ஏற்பட்ட விபரீதங்களை யாரும் மறந்து இருக்க மாட்டார்கள். இப்படி தடித்த வார்த்தை பேசுவது அவரதுவழக்கம்.

சட்டமன்றத்தில் இவரைப் பார்த்து துரை முருகன் பேசியதை மனேகரன் மறந்து இருக்க மாட்டார்.

அண்ணாநகர் வீட்டை விலைக்குத் தரத் தயாரா என்றுகருணாநிதிகேட்டார்.

கொள்ளைக்காரன் கால் தூசு கூட என் வீட்டில் படக்கூடாது என்று மனேகரன் பேசவில்லையா? இதெல்லாம் அண்ணா பத்திரிகையில் வந்திருக்கிறது.

சம்பல் பள்ளத்தாக்கு கொள்ளைக்காரர் என்று கூட சொல்கிறார். இது அவரது இயற்கை.

## கோபாலபுர அகதி பேச்சு

நேரத்திற்கு நேரம் வித்தியாசமான பொருள் உள்ளே போவதால் வித்தியாசமான வார்த்தைகள் வருகின்றன.

மனேகரன் அரசியல் பேசவில்லை. கோபாலபுரத்து அகதி பேசுகிறார்.

புரட்சித்தலைவரை இப்படித் திட்ட வைத்து இதைப் பத்திரிகையில் செய்தியாக போடத் துடிப்பவர் கருணாநிதி.

இந்த அரசைக் கலைக்கப் போகிறார்கள், சட்டசபையை சஸ்பெண்ட் செய்யப்போகிறார்கள் என்ற வதந்திகளைக் கிளப்பி வருகிறார்.

## கருணாநிதி மவுனம்

கடந்தபத்து நாட்களாக எரிசாராய பிரச்சினைபற்றி கருணாநிதி பேசவில்லை. ஊர் ஊராக வித்யாசாகர் பற்றியும். மனேகரனுக்கு பாராட்டுக் கூட்டத்திலும் பேசி வருகிறார்.

இந்த நல்ல குணத்தோடுஇருக்கும் கருணாநிதி நீண்ட காலம் வாழ வேண்டும் என்று அவர் அடிக்கடி வணங்கும் எல்லாம் வல்ல இறைவனை வேண்டுகிறேன்,

அவர்வணங்கும் இறைவன் யார் என்ற ரகசியம் தெரிந்தவன், ஆகையால் அதைக் கூறினேன்.

நாட்டில் நடக்கும் நிகழ்ச்சிகளைப் பற்றி அவருக்கு கவலை இல்லை.

இங்கிலாந்துப் பிரதமர் வந்தார். அவரது வருகையைப்பற்றி அண்ணா பத்திரிகையில் நான் கட்டுரை எழுதினேன். வேறு எந்த பத்திரிகையும் இதைப் பற்றி எழுத முன் வரவில்லை. கழகம்தான் இதைப் பற்றி எழுதியிருக்கிறது.

இங்கிலாந்து பிரதமர் தாட்சர் இந்தியாவில் நடந்து கொண்ட முறை சரியா? தவறு என்று எழுதியது நாம்தான். இதை மறந்து விடக்கூடாது.

இது சினிமாக்கட்சி. அரசியல் தெரியாத கட்சி என்று சொன்னவர்கள் உண்டு.

ஆனல் வெளிநாட்டு நிகழ்ச்சி உள்நாட்டு நிகழ்ச்சி எல்லாவற்றையும்பற்றி மக்களுக்குசொல்வது நாம்தான்.

நம்மை யாரும் கட்டுப்படுத்த முடியாது. யாரும் நம்மை அடிமைப்படுத்த முடியாது. யாரையும் நாம் அடிமைகொள்ள எண்ணவில்லை.

## மூப்பனர் தயாரா?

ஆனல் சிலர் மிரட்டுகிறார்கள். கலைத்து விடுவோம் என்கிறார்கள்.

மூப்பனர் சில நாட்களுக்கு முன்பு பேசி இருக்கிறார். ஒருவீட்டில்சோதனை நடந்தபோது காரில் நோட்டுக்களையும், நகைகளையும் வைத்து சுற்றச் செய்தார் என்று பேசி இருக்கிறார்.

கழகத்தின்சார்பில் கேட்கிறேன். யார் அந்தப்பணக்காரர்? எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்? சொல்ல தைரியம் உண்டா?

அப்படிப்பட்டவர் யாராக இருந்தாலும்அவர்களை சமூக பகிஷ்காரம் செய்ய கழகம் தயார். மூப்பனர்அதற்குத்தயாரா?

## இந்தி திணிப்பும் ஆங்கிலமும்

இந்தியைத் திணிக்க மாட்டோம் என்று பிரதமர் சொல்லி இருக்கிறார். அதற்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறோம்

ஆனல் அதே நேரத்தில் ஆங்கிலத்தின் நிலைஎன்ன? அது நீடிக்குமா?இல்லையா?

ஆங்கிலம் இல்லை என்றால் அந்த இடத்தில் இந்தி கட்டாயம் புகுந்து விடும். ஆங்கிலம் இல்லை என்றால் வருங்காலத்தில் இந்தி



தானக வந்து விடும்'

இதைப்பற்றி கழகம் தெளிவாக சொல்கிறது. இதைப்பற்றி திமு கழகம் தெளிவாக பதில் சொல்லியாக வேண்டும்.

முதல்வர் புரட்சித் தலைவரோடு நானும் ராமநாதபுரம் பகுதிக்குச் சென்று இருந்தேன்.

அங்கே எரிந்தது 100 குடிசைகள் தான் இருக்கும்.

## முகவையில் விஷமிகள் நடத்திய சதி

3-4கிராமங்களில்கலவரம் நடந்து இருக்கிறது. 10-12 வைக்கோல் போர்கள்எரிந்தன.

ஆனல் கிளப்பப்பட்ட பீதி ஏராளம்.

தமிழ்நாட்டில் அரிஜன மக்களுக்கு பாதுகாப்பு இல்லை என்றுசொல்லி இந்த ஆட்சியை கலைக்கச்சொல்லலாம் என்று சிலர் கருதுகிறார்கள்.

புரட்சித்தலைவர் மலேசியா (தெலுங்கு மாநாட்டுக்கு) போவார். அந்த நேரம் பார்த்து கலவரம்-கிளர்ச்சி நடத்த திட்டமிட்டு சதி செய்தனர்.

கிராமம் கிராமமாகச் சென்று இரவு பகலாக விஷ விதைகளைத் தூவினார்கள், பகையை வளர்த்தார்கள்.

ஆனல் அங்கே நடந்தது ஆதிதிராவிடர்கள், இந்துக்கள் மோதல் அல்ல.

இந்துக்களுடைய தானியங்களை அரிஜனங்களிடம் ஒப்படைத்து இருந்தோம். அவர்கள் பாதுகாத்துக் கொடுத்தனர் என்று கூறினர்கள்.

ஒரு மரவியாபாரி- இந்திய கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்தவர் அவரை சார்ந்தவர்கள் ஆதிதிராவிடர்கள்.

ஆகவே நடந்தது ஜாதி சண்டை அல்ல- ஆனல் அதற்கு ஜாதி வண்ணம் பூசப்பார்க்கிறார்கள்.

குறிப்பிட்ட சிலர் ஆங்காங்கேமுகாமிட்டுகிராமங்களில் கலவரம் செய்ய கொள்ளை அடிக்கத் தூண்டினர்கள்.

முதல்வர் புரட்சித்தலைவர் வருவார் என்று அவர்கள் நினைக்கவில்லை. ஆனல் புரட்சித்தலைவர் மலேசிய பயணத்தை ரத்து செய்து விட்டு முகவை போனர்.

தாயைக்கண்டு குழந்தைகள் ஓடி வருவது போல மக்கள் புரட்சித்தலைவரிடம் ஓடிவந்தனர்.

கலவரம் இடம் தெரியாமல் போய்விட்டது.

புரட்சித்தலைவர் வந்த போது ரயில் கேட் மூடி இருந்தது- புரட்சித் தலைவர் கார் நின்றது.

புரட்சித் தலைவரைப் பார்த்த ரயில் பெட்டியில் இருந்த மக்கள் ரயில் சங்கிலியை பிடித்து இழுத்து ரயிலை நிறுத்தி புரட்சித் தலைவரைப் பார்த்து அவரது கையைக் குலுக்கிய பிறகே ரயிலைச் செல்ல விட்டனர்.

அந்தஅளவுக்கு புரட்சித் தலைவர் மீது மக்கள் நம்பிக்கை வைத்திருக்கிறார்கள்.

ஆகவே புரட்சித் தலைவரை பொதுமக்களிடமிருந்து பிரிக்க யாராலும் முடியாது.

புரட்சித்தலைவர் மீது மக்கள் நம்பிக்கை வைத்திருக்கிறார்கள். அந்த மக்களுக்காக புரட்சித்தலைவர் ஆட்சி நடத்துகிறார்.

புரட்சித்தலைவரை நம்பாத அவர்களுக்காக அல்ல. அவர்களுக்கு தங்கள் மீது நம்பிக்கை இல்லை.

கழக ஆட்சியைக் கலைப்போம் என்கிறார்கள். யாரும் கலைக்க முடியாது.

(1-ம் பத்தி பார்க்க)

(6-ம் பத்தி தொடர்ச்சி)

அப்படிக் கலைத்தால் மீண்டும் முதல்வராக வருவது புரட்சித் தலைவராகத் தான் இருக்கும். அவரது செல்வாக்கை யாராலும் குலைக்க முடியாது.

## ஒரு கற்பனை

ஒரு கற்பனை செய்து பார்ப்போம். கருணாநிதி முதல்வர், மனேகரன் நிதி மந்திரி

எந்த மனேகரன் கருணாநிதியைப்பற்றி சட்டசபையில் பேசியிருக்கிறாரே அதைப்படித்துக் காட்டினல் போதும். கருணாநிதி தலை குனிவார்.

## கழகத்தில் 40 லட்சம் தொண்டர்கள்

கழகத்தில் 40 லட்சம் தொண்டர்கள் இருக்கிறார்கள். இப்படிப்பட்ட தொண்டர்களைக்கொண்ட ஒரு கட்சி இந்தியாவில் இருக்கிறதா?

சமுதாய முன்னேற்றப் பணிகளை இந்த இயக்கம் விட்டுவிடாது.

இவ்வாறு ப. உ. ச. பேசினர்.

திருவண்ணாமலையில் இரும்பு படிவங்கள்

# மீண்டும் ஆய்வு செய்ய மத்திய அரசிடம் வலியுறுத்தல்

சென்னை, ஏப். 21— சட்ட மேலவையில் கேள்வி ஒன்றுக்கு பதிலளித்து அமைச்சர் திருநாவுக்கரசு கூறியதாவது:-

திருவண்ணாமலைப் பகுதியில் இரும்பு படிவங்கள் இருப்பதை ஐக்கிய நாடுகள் வளர்ச்சி திட்டத்தின் கீழ் தமிழ்நாடு கனிம நிறுவனம் ஆய்வு நடத்தி அதைசோதனையிட்டபோது 33 சதவிகித இரும்பே காணப்பட்டது.இது வியாபார ரீதியில் லாபகரமாக இருக்காது என்பதால் கைவிடப்பட்டது.

எஃகு ஆலை அமைக்கும் பொறுப்பு மத்திய அரசிடம் இருப்பதால் மீண்டும் இதை ஆய்வு செய்யவேண்டும் என்று மத்திய அரசை வற்புறுத்தி யிருக்கிறோம். மேலும்வலியுறுத்துவோம்.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு கூறினர்.

பெங்களூரில்

# அம்பேத்கார் சிலைக்கு கழகத்தினர் மாலையணிவிப்பு

பெங்களூர், ஏப். 21- கழக முன்னணியினர் அம்பேத்கார் சிலைக்கு மாலை அணிவித்தனர். பி. முனியப்பா, கிருஷ்ணராஜ், முத்துக்குமரன், கே. சடகோபன், அ. பழனி, கே. மூர்த்தி, ஜி. அப்பு வி. கைலாசம், எம். கலையரசன், டி. ராஜன், எஸ். சண்முகம், என். ஞானகிராமன், ஆர். எஸ்.மணி, ஆர்.பழனி ஆகியோர் மாலை அணிவித்தனர்.

தலைமைக் கழக தேர்தல் அறிக்கை எண்: 72-81

# கர்நாடக மாநில கழகத் தேர்தல்

கர்நாடக மாநில கழகப் பிரதிநிதிகள் தேர்தல் 29-4-81 அன்று காலை 10 மணி முதல் பகல் 1மணி வரை கீழ்கண்டவாறு முறைப்படி நடைபெறும்.

| மாவட்டம் | தேர்தல் ஆணையர் | இடம் |
|---|---|---|
| 1. பெங்களூர் | ஜேப்பியார் எம். எல். சி. | ஆற்காடு நாராயணசாமி முதலியார் சத்திரம் |
| 2. சிமோகா | கு. க. செல்வம் | துர்கா லாட்ஜ் |
| 3. கோலார் | ஏ. வி. கிருஷ்ண மூர்த்தி | பயணியா விடுதி |
| 4. மைசூர் | தி. நகர் மூர்த்தி | நாளை அறிவிக்கப்படும் |

ஹாசன், குடகு, தும்கூர், சித்திரதுர்கா ஆகிய கிளைகள் 29-4-81 காலை 10மணிக்கு கூடி மாநில கழக பிரதிநிதிகளை ஏற்கனவே அறிவிக்கப்பட்டவாறு ஒவ்வொரு பிரதிநிதியைத் தேர்ந்தெடுத்தல் வேண்டும்.

இதேபோல் மைசூர், சிமோகா, கோலார், பெங்களூர் ஆகிய கிளைகளின் செயலாளரும், மேலமைப்பு பிரதிநிதிகளும் தலைமை கழகத்திலிருந்து அனுப்பி வைக்கப்பட்டுள்ள தேர்தல் அதிகாரியின் தலைமையில் கூடி ஏற்கனவே அறிவித்தவாறு ,மைசூர் மாவட்டத்திற்கு 6 பிரதிநிதிகளும், கோலார்மாவட்டத்திற்கு 5 பிரதிநிதிகளும், சிமோகா மாவட்டத்திற்கு 10 பிரதிநிதிகளும், பெங்களூர் பெருநகரத்திற்கு 50 பிரதிநிதிகளும் தேர்ந்தெடுத்தல்வேண்டும்.

மேலே கண்டவாறு தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் மாநில தேர்தல் அதிகாரியிடம் 30—4—81 அன்று காலை 9 மணிக்குள் மாநில பிரதிநிதி ஒருவருக்கு கட்டணமாக ரூபாய் 25 வீதம் செலுத்தி பதிவு செய்துகொள்ள வேண்டும். அதற்குப் பிறகு தரப்படும் பெயர்கள் பட்டியலில் சேர்க்கப்படமாட்டாது.

## கர்நாடக மாநில கழக நிர்வாகிகள் தேர்தல்

30-4-81 காலை 10மணி முதல் பகல் 12மணிவரை கீழ்கண்ட பதவிகளுக்கான வேட்பு மனுக்கள்பெறப்படும்.

| | |
|---|---|
| மாநில கழக அவைத்தலைவர் | —1 |
| மாநில கழக செயலாளர் | —1 |
| மாநில கழக துணைச் செயலாளர்கள் (பெங்களூர்-2 மற்றப்பகுதிகள்-2) | -4 |
| மாநிலக்கழகப் பொருளாளர் | -1 |
| தலைமைக் கழக பொதுக்குழு உறுப்பினர்கள் | -10 |

## வேட்புமனு கட்டண விவரங்கள்

| | |
|---|---|
| மாநில செயலாளர் | ரூ.10 |
| மாநில நிர்வாகிகளுக்கும், மற்ற பொறுப்புகளுக்கும் தலைமை கழக பொதுக்குழு உறுப்பினர்களுக்கும் | ரூ 50 |
| மாநில பிரதிநிதிகளுக்கு | ரூ 25 |

## தேர்தல் நடைபெறும் இடம்

கர்நாடக மாநில கழக நிர்வாகிகளுக்கும் தலைமைக் கழகப் பொதுக்குழு உறுப்பினர்களுக்குமான தேர்தல் பெங்களூரில் உள்ள ஆற்காடு நாராயணசாமி முதலியார் சத்திரத்தில் அன்று பகல் 2 மணி முதல் நடைபெறும்.

## தேர்தல் ஆணையாளர் ஜேப்பியார் எம். எல். சி.

தேர்தலில் போட்டியிடுகின்றவர்கள் கட்சிக் கட்டுப்பாட்டை குலைக்கும் வகையில் ஈடுபடுவார்களேயானல் அவர்கள் தேர்தலிலே வெற்றி பெற்றாலும் கூட அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டது செல்லாது என்று அறிவிக்கப்படுவதோடு அவர்கள் மீது ஒழுங்கு நடவடிக்கையும் எடுக்கப்படும். மறு தேர்தல் நடத்தும்போது அப்படி ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்பட்டவர்கள் தேர்தலில் நிற்க அனுமதிக்கப்படமாட்டார்கள்.

வேட்பு மனுக்களை வேட்பாளரோ, முன்மொழிபவரோ அல்லது வழிமொழிபவரோ இவர்களில் யாரேனும் ஒருவர் தாக்கல் செய்யலாம். வேட்பாளர் தான் நேரில் வரவேண்டும் என்பதில்லை. வேட்பாளர்களை முன்மொழிபவர்கள், வழிமொழிபவர்கள் மாநில கழக பிரதிநிதிகளாக இருக்கவேண்டும்.

கர்நாடக மாநில கழக வாக்காளர்கள் பட்டியல் தலைமைக் கழகத்தில் தயாராக உள்ளது.

கழகத் தோழர்கள் முழு மனதுடன் ஒத்துழைக்க வேண்டுகிறேன்.

ப. உ. ச.

சென்னை-14 பொதுச்செயலாளர்
21-4-81 அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம்

# ப. உ. ச. கடிதம்... (1-ம்பக்கத் தொடர்ச்சி)

யின்றி சர்க்கரை ஆலை கிடங்குகளிலிருந்து ஒருமூட்டை சர்க்கரைகூட வெளியில் கொண்டுவர முடியாது.

உற்பத்தியில் எழுபது சதவிகிதத்தை அரசு மக்களுக்கு நேரிடையாகக் கார்டுமூலம் விற்கிறது. மீதம் முப்பது சதவிகிதம் ஆலைகள்- பொதுச் சந்தையில் விற்க அனுமதிக்கப்படுகிறது.

அரசு விற்கும் சர்க்கரை விலையை அரசே நிர்ணயிக்கிறது! இருந்தாலும் "விலை தாறுமாருக ஏறுகிறது! காரணம் தெரியவில்லை" என்று அமைச்சர் நாடாளுமன்றத்தில் தெரிவிக்கிறார்!

அரசு மாதா மாதம் உத்திரவு வெளியிடுகிறது. அதற்கேற்பதான் சர்க்கரை கிடங்குகளிலிருந்து வெளியில் விடப்படுகிறது.

நம் நாட்டு மக்கள் அனைவரும் சர்க்கரையைப் பயன்படுத்துவதில்லை. காரணம் ஏறக்குறையப் பாதிப்பேர் வறுமைக் கோட்டிற்குக் கீழ் வாழும் மக்கள்! சாப்பாட்டிற்கே வழியில்லை; சர்க்கரை வாங்க எங்கே போவது? ஆனல் அவர்களையும் கணக்கில் எடுத்துக் கொண்டுதான் சர்க்கரையைப் பிரித்துக் கொடுக்கிறார்கள்!

இருந்தாலும் சர்க்கரை விலை ஏறுகிறது!

காரணம் தெரியவில்லை என்று அமைச்சர் கூறுகிறார்!

விலை ஏற்றத்திற்கு மாநில அரசைக் குறை கூறும் கோணல் புத்தியினர் தங்கள் கவனத்தை இதில் செலுத்த வேண்டும்.

உற்பத்தி செய்யும் சர்க்கரை அரசின் கட்டுப்பாட்டுக்குள் கிடங்குகளில் உள்ளது!

அரசு ஆணையிடும் அளவுதான் வெளியில் விடப்படுகிறது!

அந்த அளவில் 30 சதவீதம் மட்டுமே பொதுச் சந்தைக்கு!

எழுபது சதவீதம் அரசு நிர்ணயிக்கும் விலைக்கு மக்களுக்கு விற்கப்படுகிறது!

இவ்வளவு கட்டுக்காவலையும் மீறி விலை ஏறுகிறது.

ஆச்சரியமாயிருக்கிறதா? ஆயாசமாயிருக்கிறதா?

பயப்படாதீர்கள். விலை உயர்ந்தால் (எந்த அளவு உயரவேண்டும், என்று கேட்காதீர்கள்) வெளிநாட்டிலிருந்து சர்க்கரை இறக்குமதி செய்யப்படும்! மத்திய அமைச்சர் உறுதி அளித்துவிட்டார்!

பொறுமையாய் இருங்கள்.

அன்புள்ள

ப. உ. ச.

மூலகொத்தளத்தில்

# கழக பொதுக்கூட்டம்

22—4—81 புதன் மாலை 7 மணியளவில்
45-வது வட்டம் மூலகொத்தளம் அழகிரி திடலில்

தலைமை: எம். வீரராகவன்

முன்னிலை: வி. ஆறுமுகம், ஆர். பி. முத்து

வரவேற்பாளர்கள்:
எம். ராஜு, திருவேங்கடம், புருஷோத்தமன்

சிறப்புரை:

**திருப்பத்தூர் ராமமூர்த்தி**

**எஸ். எம். துரைராஜ்**

**நவரசம் ஜி. கே. எஸ்.** எம் எல் ஏ.

**காடுவெட்டி கண்ணப்பன்** எம்.எல்.சி.

**திருவை அண்ணாமலை**

ஏ. வி கிருஷ்ணமூர்த்தி

இ. மதுசூதனன் சி ஜெயபால்.

என் ஏழுமலை. எஸ் விஜயன்

நன்றியுரை: ஆண்ட்ரூஸ்

தலைமைக் கழக அறிக்கை எண்: 71/81

## மதுரை மாவட்டம் பழனி நகர கழகத் தோழர்களுக்கு

கட்சி விதிமுறைகளுக்கு மாறாக நடந்து கழகத்தின் நற்பெயருக்குக் களங்கம்கற்பிக்கும் வகையில் தகாத செயல்களில் ஈடுபட்ட காரணத்தால் மதுரை மாவட்டம் பழனி நகரத்தைச் சேர்ந்த

**எஸ். பி மாணிக்கம்**

(23-வது வட்ட செயலாளர்)

இன்று முதல் கழகத்தின் சாதாரண உறுப்பினர் பொறுப்பு உட்பட அனைத்துப் பொறுப்புகளிலிருந்தும் நிரந்தரமாக நீக்கப்படுகிறார்.

கழக, சார்புமன்ற தொழிற்சங்கத் தோழர்கள் யாரும் அவருடன் எவ்விதத் தொடர்பும் வைத்துக் கொள்ளவேண்டாம் என்று கேட்டுக்கொள்ளப் படுகிறார்கள்.

மாண்புமிகு புரட்சித்தலைவர் அவர்களது ஒப்புதலுடனும், பொதுச்செயலாளர் திருமிகு. ப. உ. ச. அவர்களது அனுமதியுடனும் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது.

எச். வி ஹண்டே

சென்னை-14 அமைப்புச் செயலாளர்
21-4-81.

Published by K.Ravindran on behalf of Thangamani Publications and printed by him at All-India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road. Madras-600 029.

Editor: E. PARASURAMAN

## வாடகை உயர்வை எதிர்த்து வழக்கு தள்ளுபடி

சென்னை, ஏப். 21— சென்னை வண்ணாரப் பேட்டையிலுள்ள வ.உ.சி. நகரைச் சேர்ந்த பாண்டியன், துரைசாமி, தேவராஜ், ராமையஉடையார் ஆகியோர் குடிசை மாற்று வாரிய குடியிருப்பில் வசித்து வருகிறார்கள் இவர்கள் தங்கள் வீடுகளில் கடை வைத்து நடத்திவந்தனர். இதனால் குடிசை மாற்று வாரியம் இவர்கள் வாடகையை 10 ரூபாயிலிருந்து 100 ரூபாயாக மாற்றியது. இதை எதிர்த்து இவர்கள் சென்னை ஐகோர்ட்டில் ரிட்மனு தாக்கல் செய்தனர். நீதிபதி நைனார்சுந்தரம் இந்த ரிட்மனுவை விசாரித்து தள்ளுபடி செய்தார்.

## தஞ்சை மாவட்டத்தில் 57 கிராமங்களில்

# நிலவரி ரத்து

## வறட்சி நிவாரண நடவடிக்கை

**தஞ்சாவூர், ஏப். 21. வறட்சி நிவாரணத்தையொட்டி தஞ்சை மாவட்டத்தில் 57 கிராமங்களில் நிலவரி ரத்து செய்யப்பட்டுள்ளதாக மாவட்ட கலெக்டர் எஸ். சுந்தரேசன் கூறினார்.**

தஞ்சை மாவட்டக் கலெக்டர் எஸ். சுந்தரேசன் நிருபர்களிடம் பேசுகையில் கூறியதாவது:-

தஞ்சாவூர் ரெவின்யூ டிவிஷனில், 33 கிராமங்களில்' பயிர்கள் அடியோடு வறட்சியால் பாதிக்கப்பட்டுவிட்டன.

மற்றும் 24கிராமங்களில் பயிர்கள் ஆங்காங்கே பாதிக்கப்பட்டுள்ளன.

இந்த 57 கிராமங்களிலும், நிலவரி ரத்து செய்யப்பட்டுள்ளன.

வரிதள்ளுபடி மொத்தம் 5 லட்ச ரூபாய் அளவில் இருக்கும்.

நிலவரி ரத்து செய்யப்பட்ட பகுதிகளில் லெவி சர்சார்ஜ் வரிவிதிக்க வேண்டாம் எனசம்பந்தப்பட்ட ஊராட்சி ஒன்றிய கமிஷனர்கள் கேட்டுக் கொள்ளப்பட்டுள்ளனர்.

தஞ்சை மாவட்டத்தில் வறட்சியால் பாதிக்கப்பட்ட பகுதிகளில் வறட்சி நிவாரணப்பணிகள் விரைவாக நடைபெற்றுவருகின்றன.

இவ்வாறு மாவட்டக் கலெக்டர் எஸ். சுந்தரேசன் நிருபர்களிடம் தெரிவித்தார்.

மகாபலிபுரத்தில்

## புதிய டெலிபோன் நிலையம்

திருக்கழுகுன்றம் ஏப். 21 மகாபலிபுரத்தில் நவீன வசதிகளுடன் ரூ.1.லட்சம் செலவில் புதிய டெலிபோன் நிலையம் விரைவில் கட்ட இருப்பதாக டெலிபோன் இலாகா இயக்குநர் ஏ.என். ராமச்சந்திரன் கூறினார்.

கள்ளமார்க்கெட்டில் சிமெண்ட்

## அமைச்சர் திருநாவுக்கரசு எச்சரிக்கை

சென்னை, ஏப். 21- சட்ட மேலவையில் அமைச்சர் திருநாவுக்கரசு கேள்வி நேரத்தின் போது கூறியதாவது:-

தமிழகத்தில் ஆண்டுக்கு 31 ஆயிரம்டன் சிமெண்ட் உற்பத்தியாகிறது. தமிழகத்தின் தேவை 24 லட்சத்து 81 ஆயிரத்து 601 டன்களாகும்.

ஆனால் மத்திய அரசு நம் தேவைக்கு குறைவாக சிமெண்ட் அளிக்கிறது.

நம் மாநிலத்திலேயே சிமெண்ட் உற்பத்தியானாலும் மத்திய அரசின் சிமெண்ட் கட்டுப்பாடு அதிகாரிதான் வினியோக பொறுப்பை ஏற்றிருக்கிறார்.

நாம் அதிகமான அளவில் உற்பத்திசெய்தாலும் குறைவாக ஒதுக்கப்படுகிறது. அதிகமான அளவு சிமெண்ட் ஒதுக்குமாறு மத்தியஅரசைக் கேட்டுக் கொள்கிறோம்.

கள்ளமார்க்கெட்டில் சிமெண்ட் விற்கப்படாமல் அரசு நடவடிக்கைஎடுத்து வருகிறது. அப்படி எங்காவது விற்கப்பட்டால் கடுமையான நடவடிக்கை எடுக்கப்படும்.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

சரபோஜி மன்னர் கட்டிய

## 'மனோரா' சுற்றுலா ஸ்தலம் ஆகிறது: ஆர்.எம்.வீ. தகவல்

**சென்னை, ஏப். 21— சரபோஜி மன்னர் கட்டிய 'மனோரா' சுற்றுலா ஸ்தலம் ஆக இருக்கிறது என்று செய்தி அறநிலையத்துறை அமைச்சர் ஆர். எம். வீ. தெரிவித்தார்.**

சட்டசபையில் எம்.ஆர். கோவேந்தன் கேட்ட கேள்விக்கு பதிலளித்து அமைச்சர் ஆர். எம். வீ. கூறியதாவது:-

தஞ்சை மாவட்டத்தில் பேராவூரணி தொகுதியில் சரபோஜி மன்னர் கட்டிய "மனோரா"வையும், கல்லணையையும் மாவட்ட சுற்றுலா ஸ்தலங்களாக மாற்றுவதற்கு ஆணை பிறப்பிக்கப்பட்டுள்ளது. தற்போது இத்திட்டத்தின் முதல் கட்டத்தில் கல்லணையை சுற்றுலா ஸ்தலமாக மாற்ற ஆரம்ப பணிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

திட்டத்தின் இரண்டாவது கட்டத்தில் மனோராவை மாவட்ட சுற்றுலா ஸ்தலமாக மற்ற முயற்சிகள் மேற் கொள்ளப்படும் இது 1816-ஆம் ஆண்டு யுத்தத்தின் காரணமாக எழுப்பப்பட்ட நினைவு சின்னம் புதுக்கோட்டை திருச்சி, தஞ்சை ஆகிய மாவட்டங்களுக்கு அருகே உள்ள கடற்கரை பகுதியாகும்.

இவ்வாறு அமைச்சர் ஆர். எம். வீ. கூறினார்.



குறிஞ்சிப்பாடியில்

## பண்ருட்டியார் திறந்த 3 நீர்த்தேக்க மேல்நிலைத் தொட்டி

**கடலூர், ஏப். 21— குறிஞ்சிப்பாடியில் தீர்த்தனகிரி, கல்லையன்குப்பம், மசனுங்குப்பம் ஆகிய கிராமங்களில் 3 நீர்த்தேக்க மேல்நிலை தொட்டிகளை, மாவட்ட ஆட்சித்தலைவர் வி. சந்திரலேகா தலைமையில் அமைச்சர் பண்ருட்டி இராமச்சந்திரன் திறந்துவைத்தார்.**

விழாவில் குறிஞ்சிப்பாடி கழக சட்டமன்ற உறுப்பினர் ஏ. தங்கராசு கலந்து கொண்டார்.

குறிஞ்சிப்பாடி தொகுதியைச் சேர்ந்த வெள்ளைச்சி குப்பம் காலனி, சுப்பிரமணியபுரம் காலனி ஆகிய பகுதியைச் சேர்ந்த ஏழை எளியவர்களின் குடிசைகளுக்கு ஒரு விளக்கு மின்திட்டத்தை அமைச்சர் பண்ருட்டி இராமச்சந்திரன், கழக சட்டமன்ற உறுப்பினர் ஏ. தங்கராசு தலைமையில் ஆரம்பித்து வைத்தார்.

கடலூரில் நடைபெற்ற வறட்சி நிவாரணப்பணிகள் பற்றிய அதிகாரிகளின் ஆலோசனைக் கூட்டத்தில் அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கலந்துகொண்டு நிவாரண வேலைகளை தீவிரப்படுத்தும்படி கேட்டுக்கொண்டார். கழக சட்டமன்ற உறுப்பினர் ஏ. தங்கராசு, நகர செயலாளர்கள் ஏ.ரகுபதி, மா. வேலாயுதம், ஒன்றிய செயலாளர்கள் அன்பு, தண்டபாணி, கே. எஸ். வேணுகோபால், பண்ருட்டி நகர செயலாளர் அ. ப. சிவராமன், தே. ஜனார்த்தனன், ஏ. எஸ். இராமச்சந்திரன், காத்தவராயன் உள்பட பலர் அமைச்சரை சந்தித்து வறட்சி பணிகள் பற்றிய ஆலோசனைகளை வழங்கினார்கள்.

## முதல்வருக்கு தமிழாசிரியர் பேரவை பாராட்டு

சென்னை, ஏப். 20 தமிழாசிரியர்களுக்கு புரட்சித்தலைவர் அரசு செய்த நன்மைகளுக்கு தமிழ்நாடு தமிழாசிரியர் பேரவை பாராட்டும் நன்றியும் தெரிவித்துள்ளது.

கல்வி அமைச்சர் அரங்கநாயகத்தையும், கல்வி இயக்குநர் வெங்கட சுப்பிரமணியத்தையும் பேரவை பாராட்டியுள்ளனர்.

தமிழாசிரியர் சமுதாயத்திற்கு தமிழக அரசு செய்த பல்வேறு சாதனைகளைப் பாராட்டி, சிலபுதிய கோரிக்கைகளையும் தெரிவித்தனர்.

## 109 வது வட்ட பொது உறுப்பினர் ஆலோசனைக் கூட்டம்

சென்னை, ஏப் 21— சென்னை 109 வது வட்ட பொது உறுப்பினர் ஆலோசனைக்கூட்டம் நாளை (புதன் மாலை 7 மணிக்கு டிரஸ்ட்புரம், சி.ஐ.டி. ஷாப்பிங் செண்டரில் வட்ட அவைத்தலைவர் ஆ. செல்வநாதன் தலைமையில் நடக்கிறது. வட்ட பொதுஉறுப்பினர்கள் அனைவரும் தவறாது கலந்து கொள்ள வேண்டுமென்று வட்டச் செயலாளர் வ.முருகேசன் கேட்டுக் கொண்டுள்ளார்.

## அமைச்சர் ராஜேந்திரனுக்கு பாராட்டுப் பொதுக்கூட்டம்

சென்னை, ஏப். 21. கைத்தறி வளர்ச்சிக்காக வெளிநாடு சென்று திரும்பிய எஸ். என். ராஜேந்திரனுக்குப் பாராட்டுப் பொதுக் கூட்டம் நாளை (புதன் கிழமை) இரவு 7 மணிக்கு சென்னை 53 வது வட்டம் குறளகம் அருகேயுள்ள அம்பர்சன் தெருவில் நடக்கிறது.

எம். ராமதாஸ் தலைமை வகிக்கிறார். அமைச்சர் ராஜாமுகமது, டி. கே. கபாலி எம். எல். ஏ. பா. வளர்மதி, ஏ. வி. கிருஷ்ணமூர்த்தி, சி. ஜி. ராதாகிருஷ்ணன் எம். பாபு, பி.பால்ராஜ், கே. வேலாயுதம், கே. எல்லப்பன், கே. மோகன், பி.பாண்டுரங்கன், வி.மாரிகுமார், பிள்ளைப்பாக்கம், மூர்த்தி, ஏ. தர்மராசன் எஸ் எம். கருணாநிதி, எஸ். ஏ. ஆனந்தன் மற்றும்பலர் பாராட்டி பேசுகின்றனர்.

அமைச்சர் எஸ். என். ராஜேந்திரன் பாராட்டுகளுக்கு நன்றி தெரிவித்து பேசுகிறார்.

## தி.மு.க. கறுப்புகொடி: புதுவை முதல்வர் ஓட்டம்-விழா ரத்து

**புதுச்சேரி, ஏப். 21. புதுவை தி. மு. க. முதலமைச்சருக்கு தி.மு.க.வினரே கறுப்புக் கொடி காட்ட வந்தனர். இதனால் புதுவை முதல்வர் விழாவைப் புறக்கணித்தார்.**

புதுவை தி மு. க. வில் முதலமைச்சர் ராமச்சந்திரன் கோஷ்டி என்றும் எம் ஏ. சண்முகம்கோஷ்டி என்றும் இரு கோஷ்டிகள் இருந்து வருகின்றன.

இந்த இரு கோஷ்டியினரும் ஆரம்பம் முதல் இன்றுவரையில் பல்வேறு பிரச்சினைகளில் மோதிவருகிறார்கள். அதுபோலவே இந்த மோதலும் நடந்தது.

இது பற்றிய விவரம் வருமாறு!

புதுச்சேரி அருகில் உள்ள மனவெளி எனும் இடத்தில் தி. மு. க. இளைஞர் பிரிவு துவக்க விழா கடந்த ஞாயிறன்று நடப்பதாக இருந்தது. இந்தவிழாவில் புதுவை முதல்வர் ராமச்சந்திரன் இளைஞர் பிரிவைத் துவக்கி வைப்பதாக அறிவிக்கப்பட்டிருந்தது.

புதுவை அமைச்சர்கள் பெருமாள் ராஜா, சிவகுமார், ஆகியோரும் இவ்விழாவில் கலந்து கொள்வதாக இருந்தது.

இந்த விழாவில் தங்கள் தரப்புத் தலைவர்கள் புறக்கணிக்கப்பட்டிருப்பதாகக் கூறி எதிர்த் தரப்பினர்களும் எதிர்ப்புத் தெரிவித்தனர்.

தங்கள் தரப்புத்தலைவர்கள் புறக்கணிக்கப்பட்டிருந்ததால் ஆத்திரமடைந்த அவர்கள். விழாவில் கலந்து கொள்ளவரும் முதல்வருக்கும் அமைச்சர்களுக்கும் கறுப்புக் கொடி காட்டத் தயாரானார்கள்.

இதையறிந்த முதல்வர் ராமச்சந்திரனும் மற்ற அமைச்சர்களும்விழாவுக்கு வரவில்லை. இதனால் திமுக இளைஞர் பிரிவு துவக்க விழா கைவிடப்பட்டது.

6 வது வட்டத்தில்

## இன்று மாலை அமைச்சர் காளிமுத்து பேசுகிறார்

சென்னை, ஏப். 21. சென்னை 6 வது வட்டம் ராயபுரத்தில் சி. ஜி. காலனியில் (காசிமேடு படகு கட்டும் நிலையம் அருகில்) இன்று மாலை கழகப் பொதுக் கூட்டம் நடக்கிறது.

வட்டச் செயலாளர் ராஜேந்திரன் தலைமையில் அமைச்சர் காளிமுத்து குடிசை மாற்று வாரியத் தலைவர் கபாலி, சேடப்பட்டி முத்தையா எம். எல். ஏ., பா. வளர்மதி மதுசூதனன், சோம சுந்தரம் ஆகியோரும் மற்றும் பலரும் பேசுகிறார்கள்.

உச்சவரம்பு நிலத்துக்கு மேல் உள்ள

## உபரி நிலங்களில் கால்நடைப்பண்ணை: கோமதி தகவல்

**சென்னை, ஏப். 21- உச்சவரம்பு நிலத்திற்கு மேல் உள்ள உபரி நிலங்களை அரசு கையகப்படுத்தி அதில் கால்நடை வளர்ப்பு பண்ணையை அரசு அமைக்கிறது என்றுசட்ட மன்றத்தில் அமைச்சர் கோமதி சீனிவாசன் தெரிவித்தார்.**

சட்டசபையில் இன்று கேள்வி நேரத்தின்போது உறுப்பினர்கள் கேட்ட கேள்விகளுக்கு பதிலளித்து சமூகநலத்துறை அமைச்சர் கோமதி சீனிவாசன் கூறியதாவது:

பெரியார் மாவட்டம் பழைய கோட்டையில் காங்கேயம் கால்நடை வளர்ப்புப்பண்ணை ஒன்று நிறுவ அரசு ஒப்புதல் அளித்துள்ளது.

உச்ச வரம்புக்கு மேல் உள்ள உபரி நிலங்கள் இதற்காக பயன்படுத்தப்பட்டுள்ளது. இதுபோன்ற பண்ணைகள் தமிழகம் முழுவதும் ஏற்படுத்தும் திட்டம் தற்போது அரசிடம் இல்லை. படிப்படியாக செயல்படுத்தப்படும்.

இவ்வாறு அமைச்சர் கோமதி சீனிவாசன் கூறினார்.

கோவைத்தம்பி:- காங்கேயம் பகுதியில் ஏராளமான பேர் நிலஉச்சவரம்புக்கு மேல் நிலம் வைத்திருக்கிறார்கள். மேய்ச்சல் நிலம் என்ற பெயரில் ஏராளமாக நிலம் வைத்திருக்கும் நபர்களின் நிலத்தைக் கைப்பற்றி கால்நடைவளர்ப்புப்பண்ணை அமைக்கப்படுமா?

சபாநாயகர்:- இந்த பிரச்சினைக்கும் மூல கேள்விக்கும் தொடர்பில்லை.



## பூட்டோவின்சொத்துகள்பறிமுதல்: அதிபர் ஜியா அறிவிப்பு

கராச்சி, ஏப். 21- தூக்கிலிடப்பட்ட பாகிஸ்தான் முன்னாள் பிரதமர் பூட்டோவின் சொத்துக்களை பறிமுதல் செய்ய பாகிஸ்தான் அரசு உத்தரவிட்டுள்ளது.

பாகிஸ்தான்பிரதமராகவும், ஜனாதிபதியாகவும் பூட்டோ இருந்துவந்தார். ராணுவப் புரட்சியால் பூட்டோவின் ஆட்சி கவிழ்க்கப்பட்டு ராணுவ ஆட்சிஏற்பட்டது. ஜியா பாகிஸ்தானின் சர்வாதிகாரியானார்.

அதன்பிறகு ஜியா பூட்டோ மீது ஒரு கொலை வழக்கை தொடர்ந்து அவருக்கு தூக்குதண்டனை விதித்தார். உலகத்தலைவர்கள் அனைவரின்வேண்டுகோளையும் புறக்கணித்து பூட்டோவை ஜியா தூக்கிலிட்டார்.

அதன் பிறகும் பூட்டோவின் குடும்பத்தினர் மீது ஜியா பல வழக்குகளை தொடர்ந்தார் அதன்படி இப்போது பூட்டோவின் மனைவி நசரத், மகள்பெனாசிர் ஆகியோர் காவலில் வைக்கப்பட்டுள்ளனர். அவர்கள்மீது தேசதுரோக குற்றம் சாட்டப்பட்டுள்ளது.

இந்த குற்றச்சாட்டிற்கு ஆயுள் தண்டனை விதிக்கபடும என்று கருதப்படுகிறது.

இப்போது ஜியா பூட்டோவின் குடும்பத்தையே அழிக்கஒருபுதிய திட்டத்தை கையாண்டுள்ளார். பூட்டோவின் சொத்துகளை பறிமுதல் செய்ய இப்போது ஜியா உத்தரவிட்டுள்ளார்.

பூட்டோ பிரதமராக இருந்தபோது அரசாங்க பணத்தை கையாடல் செய்தார் என்றும், அவர் 8 லட்சத்து 20 ஆயிரத்து 524 ரூபாய் அரசாங்கத்திற்கு கொடுக்கவேண்டும் என்றும், இப்போது பாகிஸ்தான் அரசாங்கம் கோர்ட்டில்வழக்குஒன்றை தாக்கல் செய்துள்ளது.

இதைத் தொடர்ந்து பாகிஸ்தானில் சிந்து மாநிலத்திலுள்ளபூட்டோவின் வீடு, நிலம், சொத்துக்கள், நகைகள் ஆகியவற்றை அவருடைய குடும்பத்தினர் வேறு யாருக்கும் மாற்றவோ, விற்கவோ கூடாது என்றுதடைவிதித்துள்ளது.

இந்த சொத்துக்கள் அனைத்தும் பூட்டோ பதவியிலிருந்த போது மோசடி செய்து வாங்கியதாக பாகிஸ்தான் அரசு தெரிவித்துள்ளது.

இந்த சொத்துக்களை பாகிஸ்தான் அரசு விரைவில் பறிமுதல் செய்யும் என்று தெரிகிறது.

கழக அரசு உத்தரவு:

## கோடை விடுமுறையில் ஆசிரியர்கள் நீக்கம் இல்லை

சென்னை, ஏப். 21— அரசு உயர் மற்றும் அரசினர் மேல்நிலைப் பள்ளிகளில் தற்காலிக அடிப்படையில் பணியாற்ற முழு தகுதி பெற்ற பட்டதாரி ஆசிரியர்கள், முதல்நிலைத் தமிழாசிரியர்கள், உடற்பயிற்சிக் கல்வியாசிரியர்கள் மற்றும் முழுத்தகுதி பெற்ற, ஆனால் வயது வரம்பு கடந்தவர்கள் மேற்படி அனைவரும் 1980-81-ஆம் ஆண்டு கோடை விடுமுறையின் போது பணி நீக்கம் செய்யப்பட மாட்டார்கள். இதற்கான ஆணையைத் தமிழக அரசு பிறப்பித்துள்ளது.

ஆஸ்திரேலிய நாட்டுக்கு

## ரூ 3 கோடி கைத்தறி துணி ஏற்றுமதி

சென்னை, ஏப். 21. ஆஸ்திரேலியா நாட்டிற்கு 1980 ஏப்ரல் முதல்81 ஜனவரி முடிய 3 கோடி ரூபாய் மதிப்புள்ள கைத்தறி துண்டுகள் ஏற்றுமதி செய்யப்பட்டிருப்பதாக கைத்தறி அமைச்சர் எஸ். என். ராஜேந்திரன் சட்டசபையில் தெரிவித்தார்.

# அண்ணா



## கலை விருந்து



''47 நாட்கள்'' படத்தில் ஜெயப்பிரதா

## பேங்கில் துப்பாக்கி முனையில் கொள்ளை

நகரின் மத்தியில்அமைந் துள்ள அந்த பேங்க் காலை எட்டு மணிக்கெல்லாம் விழித்துக் கொள்ளும். சந் தடியற்றசாலை! பேங்கில் மட்டும் வேலை நடந்து கொண்டிருக்கிறது.

காதை செவிடாக்கும் வேகத்தில் ஒருமோட்டார் சைக்கிள் அந்த பேங்கின் முன்னால் வந்து நிற்கிறது:

அடேயப்பா: எவ்வளவு பெரிய உயரம்: நெருப்பை உமிழும் பார்வை!

யாரையோ எதிர்பார்ப் பது போல் நொடிக்கொரு தடவை கடிகாரத்தைப் பார்க்கிறது.

இதோ...மணி 8.30...! அவன் எதிர்பார்த்த கார் வந்து விட்டது...

''என்னய்யா...பேங்க்.. கோயமுத்தூரிலிருந்து டிராப்ட் வந்து நாலு நாளாச்சு இன்னும் பணம் தர்ரீங்க'' ஒரு நடுத்தரப் பெண் முணுமுணுத்துக் கொண்டிருந்தாள்...

கண்மூடி திறப்பதற்குள் அந்த நீண்ட நெடிய உரு வத்தின் பிடியில் அந்தப் பெண்: கையில் துப்பாக்கி பேங்க் அசைவற்று நிற் கிறது.

''ஏய்...இருக்கிற பணத்தை எல்லாம் இந்த பேக்கில் அள்ளிப்போடு'' கேஷியரை நோக்கி பொறி கிறான்...

கேஷியர் முழிக்கிறார். மானேஜர் திகைக்கிறார். எல்லாருமே ஸ்தம்பித்து நிற்கின்றனர்! துப்பாக்கி அனலைக் கக்குகிறது!

இந்தக்காட்சி சூரியா ஆர்ட்ஸ் பிலிம்சாரின் ''சொல்லாதே யாரும் கேட்டால்'' படத்துக்காக படமாக்கப்பட்டது. வில்லனாக புதுமுகம் ராஜா நடிக்கிறார். மற்றும் ராஜ் குமார், பிரதாப், சுமலதா, ஒய். ஜி. மகேந்திரன் ஆகி யோர் நடிக்கின்றனர்.

திரைக்கதைஎழுதி ராஜ் பரத்இயக்கியுள்ளார். எஸ். கண்ணன் தயாரிக்கிறார்.

## சேதி தெரியுமா?

★ நடிகர் முத்துராம னுக்கு பிடித்தமான படத்தலைப்புகள் 'நான்' 'உச்சகட்டம்'.

★ மஞ்சுபார்கவியை முக் கியமான புதுமையான கதாபாத்திரத்தில் நடிக்க வைத்து டைரக் டர் துரை படம்ஒன்றை எடுக்கஎண்ணியுள்ளார்.

★ கமலஹாசனுடன் இணைந்து நடிப்பதுடன் கதை வசனம் எழுதி பாக்யராஜ்ஒருபடத்தை டைரக்ட் செய்கிறார்.

★ நடிகை ஜெயலலிதா வுக்கு எழுத்துக் கலை மாமணி என்ற பட்டத்தை எழுத்தாளர்வட்டத்தினர் வழங்கினர்.

முன்னாள் முதல்வர்பக்த வத்சலம், அம்புஜம்மாள், சரோஜினி வரதப்பன், டி. கே. பட்டம்மாள், சுதேசமித்திரன் இதழ், அதன் ஆசிரியர் சுந்த ரேசன் ஆகியோருக்கும் பட்டங்கள் வழங்கப்பட் டன.



''பட்டிக்காட்டுப் பைங்கிளி'' படத்தில் சக்திஸ்ரீ, சரோஜா

## ஜேசுதாஸ் நடிக்கிறார்

சி. என். டி. புரொடக் ஸன்சார் ''வலையல்'' என்ற வண்ணப்படத்தை தயா ரிக்கின்றனர்.

இந்தப் படத்திற்கு பிர பல பின்னணிப் பாடகர் ஜேசுதாஸ் இசை அமைக் கிறார். இசையமைப்ப துடன் நடிக்கிறார்.

## ரங்கமணிக்கு ரூ.ஆயிரம் பரிசு

காஞ்சி எஸ். கே. ரங்க மணியின் 'நவக்கிரகநாயகி' நாடகம் மயிலை ஆர்.ஆர். சபாவில் நடைபெற்றது. இந்திய கலாச்சாரக்கழகத் தலைவர் டாக்டர் எம். பி. சேஷாத்திரி தலைமை வகித் தார்.

நவக்கிரக வரலாற்றை யும் ஜோதிடக்கலையை யும் இணைத்து தமிழக நாடக வரலாற்றிலேயே முதன்மையாக நாடகமாக சிறப்பாக நடத்தியதற்கு சேஷாத்திரி பாராட்டுத் தெரிவித்தார். மத்திய கலாச்சாரக்கழகம் சார்பில் ஆயிரம் ரூபாய் பரிசு வழங் கினார். ஜூன்மாதம்டெல்லி யில் நாடகம் நடத்த தனி அழைப்பும் கொடுத் தார்.

## சிறந்த சினிமா பத்திரிகையாளர் செல்வகணேசன்

நந்தம்பாக்கம் அரிமா சங்கத்தினர்சிறந்த சினிமா பத்திரிகையாளராக மாலை முரசு கணேசனை தேர்ந் தெடுத்து கேடயம் வழங் கினர். சிறந்த பத்திரிகை யாக எல். ஆர். சுவாமி பிலிம் கிளப் இதழுக்கு பரிசு வழங்கப்பட்டது.

1979-ஆம் ஆண்டுக் கான பரிசளிப்பு விழா நடந்தது. அனந்தராமன் வரவேற்றார்.



''வா இந்தப் பக்கம்'' ஜெயதேவி

## ''ராஜபார்வை''

கமஹாசனின் நூறாவது படம் என்கிற முத்திரை யுடன் வெளிவந்துள்ள படம் ராஜபார்வை!

தந்தையின் மறைவுக்குப் பின் சிற்றன்னையைப் பிரிந்து, கண்ணொளியையும் இழந்து தனியாக தன்னம் பிக்கையோடு வாழும் இளைஞன். மோதலில் துவங்கி, கண்ணிழந்தவன் என்பதை அறிந்தும்கருணைபொங்கி, மன்னிப்புக் கேட்கத் தேடி வந்து காதலில் சிக்கிக் கொள்ளும் பெண்.

காதலுக்குக் கண்ணில்லை என்கிறபோது காதலனுக் குக் கண்ணில்லா விட்டால் என்ன வென்றுஅவள் நினைக்கிறாள். வீட்டில் எதிர்ப்பு - வேறு ஒருவனுக்கு மணமுடிக்க திட்டம்! சர்ச்சில் திரு மணம் நடக்கும்போது மணப் பெண்ணுடன் கதாநாயகன் ஓடிப்போகி றான்!

ராஜபார்வை இது தான்!

காதலிக்காக காத்திருந்து விட்டு, நள்ளிரவில் கண்ணொளி இழந்தோர் இல்லத்திற்கு தனது பிறந்த நாளன்று செல்லும் கதாநாயகனுக்கு தூங்கா மல் இருந்து ஒரு குழந்தை சாக்லெட் கொடுக்கும் இடம்.

கதாநாயகனுக்கு தகுந்த படி பார்வையற்ற ஒரு பெண்ணைக் கொண்டுவந்து சித்தி திருமணம் செய்து கொள்ள ஏற்பாடு செய்வ தும், அந்தப்பெண் உண்மை அறிந்து, சொல்லும்வார்த் தைகளும், காட்சியும்—

நெஞ்சத்தைத் தொட்டு நெகிழ வைக்கும் கட்டங் கள்!

### நடிப்பு

கமலஹாசன் அலட்டிக் கொள்ளாமல் சேஷ்டை கள் செய்யாமல் அமைதி யாக இயற்கையாக நடித் திருக்கிறார். மாதவியை வர்ணித்துப்பாடும் காட்சி யில் காதலைக் காணு கிறோம். இன்னொரு குருட் டுப் பெண்ணிடம் வேதனை யோடு தனது நிலையைச் சொல்லும் போதும், காதலியைப் பிரிந்து துடிக் கும் போதும் சர்ச்சில் மேல் மாடத்தில் அமர்ந் திருந்து காதலி வந்து விட் டாளா, எப்படி இருக் கிறாள், மகிழ்ச்சியாக இருக் கிறாளா என்று கேட்கும் போதும்உருக்கமாகநடித்து உள்ளத்தைத் தொடு கிறார். எண்ணிக்கையால் மட்டுமல்ல, திறமையால் நம் எண்ணத்தில் பதி கிறார்.

மாதவி நல்ல உயரம்- எடுப்பான தோற்றம்! நடிப்பில் உயரவேண்டும்.

ஒய். ஜி. மகேந்திரனை தும்பறுந்த காளையாகஇஷ் டத்துக்கு விட்டுவிட்டார் கள். கலகலப்புக்கு அவர் காரண கர்த்தாவாகிறார்.

படத்தைப் பார்த்து விட்டு வருகின்றவர்கள் மனதில் முதல் இடத்தைப் பிடித்துக்கொண்டுஎன்றும் மறக்க முடியாதபடி செய் திருப்பவர் வெள்ளை முடித் தாத்தாதான்!

அப்பப்பா..அவர் அடிக் கிறகொட்டம்கொஞ்சமா? நஞ்சமா? பேத்திக்காக கடைசிகாட்சியில் மனைவிக் கும் மகனுக்கும் கன்னம் பழுக்கப் பழுக்கக் கொடுக் கும் போதுஅரங்கில் கைத் தட்டல் எழுவது காட்சிக் காக மட்டுமா—அவரது, நடிப்புக்காகத்தான்! எல். வி. பிரசாத்இவ்வளவு நேர்த்தியாக நடிக்கக்கூடி யவர் என்பதை இப்போது வெளிப்படுத்தியதற்காக ஹாசன் பிரதர்சைப் பாராட்ட வேண்டும்.

இளையராஜா இசை யமைத்திருக்கிறார்.

''உங்கள் இரவைவிட எங்கள் பகல் இருட் டானது''

—உரையாடல்கள் இப் படி நெஞ்சை அள்ளும்

## எக்ஸ்ரே.

வகையில் உள்ளன.

தில்லானா மோகனாம் பாள் படத்தில் சண்முக சுந்தரம் நாதசுவரம் வாசிப்பவன் என்பதைக் காண்பித்ததோடு நாத சுவரத்தின் நாதவெள்ளத் தையும் இனிமையாகத்தந் தார்கள். கலைக்கோவிலில் வீணைக்கு முக்கியத்துவம் தந்து எடுத்தார்கள்—அதி லும் வீணையின் நாதம் இனிமையாக இருந்தது. இதில் கதாநாயகனை வய லின் வாசிப்பவனாகக் காண்பித்திருக்கிறார்கள். அதற்கேற்றபடிகாட்சிகள்- இசை உள்ளதா? நினைவில் தங்குகிறதா?

கண்ணில்லாதவன் என் பதையும் வயலின் வாசிப் பதில் திறமையுள்ளவன் என்பதையும் இணைத்து இவ்வளவு பிரமாண்டமாக படம் தயாரித்தவர்கள் இன்னும் சிறப்பாகச் செய் திருக்கலாமே என்ற எண் ணம் எழத்தான் செய்கி றது!.

சிங்கீதம் சீனிவாசராவ் டைரக்ட் செய்திருக்கிறார்.

ஒளிப்பதிவு இவ்வளவு அருமையாகக் கூட செய்ய முடியுமா?

அற்புதமானபடப்பிடிப்பு!

உடல் ஊனமடைந் தாலும் மனம்மட்டும் ஊனம் அடையக் கூடாது என்கிற தன்னம்பிக் கையைத்தரும் வகையில் படம் உருவாக்கப்பட்டுள் ளது.

மொத்தத்தில்—

**கண்கள் இரண்டும் இல்லாதவன் சித்திரம் எனினும் கைகொட்டி ரசிக்கலாம்!**

## ''கண்ணீர்ப் பூக்கள்''

காதல் மனைவியைப் பிரிந்து அவள் நினை வாகவே வாழும் பாரத், அலுவலகத்தில் தனது செயலாளராக பணிபுரியும் மோகனாவை தனக்குத் துணைவியாகவும், தன் குழந்தைக்குத் தாயாகவும் இருக்கும்படி கோருகிறான்.

காலடியில் உள்ள ஆற்றுமணலைக் கூட கணக்கெடுந்து விட லாம், தன்னோடு உறவு கொண்டவர்களின் எண் ணிக்கையை கூறமுடியாது என்று அவள்உண்மையைச் சொல்லி, பாரத்தோடு வாழ தனக்குத் தகுதி யில்லை என்கிறாள்.

அவன் வற்புறுத்தி மணக் கிறான். வழக்கமான சந் தேகம்வருகிறது. மோகனா அவனுடைய குழந்தை யோடு ஓடிவிடுகிறாள். சூழ்நிலைதான் ஒருவரை உருவாக்குவதும், உருக் குலைப்பதும் என்று அவனை உணரவைக்கிறாள்மோகனா!

இதுதான் கண்ணீர்ப்பூக் கள் தொடுக்கப்பட்ட கதைச்சரம்!

விஜயன் முடியும், அரி வாள் மீசையும், பேட்டை போக்கிரியைப்போல் இருக் கிறது! நடிப்புக்குத் தோற் றம் முக்கியமில்லையா? அவர் நன்கு நடித்தும் எடுபடா ததற்கு இது தான் கார ணம்!

ஸ்ரீ பிரியா உடல் இளைத் திருக்கிறது. நடிப்பு இளைக்க வில்லை!

ரூபா முதல் மனைவியாக இயற்கையாக நடித்துள் ளார்.

மனோரமா, அனுமந்து நடித்துள்ள ஒரு சிலகாட்சி கள் நகைச்சுவையும் தென் படட்டும் என்பது போல் உள்ளன.

பண்டரிபாய், விஜய் பாபு, ஆனந்த், மஞ்சு, ரோகிணி ஆகியோர் நன்கு நடித்துள்ளனர்.

கதையின் ஒரு பாதி பழசு, மறுபாதி புதுசு! சிவசங்கரி எழுதியுள்ளார்.

மலருக்கு அழகும், மண மும் இணைந்து இருந்தால் எத்தனைசிறப்பு! அதுபோல் உரையாடல்களை கருத்தழ கோடும் இயக்கத்தை மணமாகவும் தந்து படத் துக்கு சிறப்பினைத் தேடித் தந்துள்ளவர் ராஜசேகர்!

புலவர் புலமைப்பித்தன் வாலி, பூங்குயிலன், வைர முத்து பாடல்களுக்கு சங் கர் கணேஷ் இசையமைத் திருக்கிறார்.

மொத்தத்தில்—

கண்ணீரும் பூக்களும் யாருக்கு உரியதோ அவர் களை அதிகமாகக் கவரும்!

-நாகை தருமன்



'டைகர்' படத்தில் ரஜனி

## ஐசரிவேலன் நடிக்கும் கானலுக்கு கரை ஏது?

புஷ்பாஞ்சலி பட நிறு வனத்தினர் ''கானலுக்குக் கரை ஏது?'' என்ற பெய ரில் தயாரிக்கும் வண்ணப் படத்தில் ஐசரிவேலன் முக் கியவேடத்தில் நடிக்கிறார்.

சங்கர், மேனகா, கிருஷ் ணப்பிரியா, குமாரராஜா தேங்காய்சீனிவாசன், காந்தி மதி மாஸ்டர் ஹாஜா ஷெரீப் ஆகியோர் நடிக் கின்றனர்.

இதன் தொடக்கவிழா 14-ஆம் தேதி ஏவி. எம். ஸ்டுடியோவில் புலவர் புல மைப்பித்தன் பாடல் ஒன்றை சங்கர் கணேஷ் இசையமைப்பில் ஒலிப் பதிவு செய்ய நடந்தது. துவக்க விழாவிற்கு புலவர் புலமைப்பித்தன், திருப்பூர் மணிமாறன். ஜி. கே. எஸ். டைரக்டர்கள் ஏ. ஜெகந்நாதன், எஸ். ஜெக தீசன், கிருபாசங்கர் நடிகர் ஜெய்சங்கர், ஐசரி வேலன் காந்திமதி, ஜெயதுர்கா ஆகியோர்வருகைதந்திருந் தனர்.

கதை வசனத்தை துரை கதிர் எழுதுகிறார். லட்சுமண் கோரே ஒளிப் பதிவு செய்கிறார்.

திரைக்கதை, டைரக் ஷன் பொறுப்புகளை சுவர்ணமூர்த்தி ஏற்றுள் ளார். லலிதா நாராயணன் தயாரிக்கிறார்.

## குஜராத்தில் டைரக்டர் கர்ணன் காரைக்கொளுத்த முயற்சி

குஜராத்தில் கார் மீது பெட்ரோல் ஊற்றி கொளுத்த முயற்சித்த கிளர்ச்சிக்காரர்களிட மிருந்தம் டைரக்டர் கர்ணன் தப்பி உயிர் பிழைத்தார்.

இந்திராணி பிலிம்சாரின் 'அவளுக்கு நிகர் அவளே' படத்தின் வெளிப்புறப் படப்பிடிப்பிற்காக நவீனக் கருவிகள் பொருத்தப் பட்ட ஒரு காரில் டைரக்டர் கர்ணன் தனது உதவியாளர்களுடன் ராஜஸ்தானுக்குப் புறப் பட்டார்.

குஜராத் மாநிலத்தின் தலைநகரான அகமதாபாத் சென்றபோது அலங்கோல மாக அந்த ஊர் காட்சி யளித்ததையும், ஆங்காங்கு தீப்பற்றி எரிந்ததையும் அவர்கள் கண்டனர்.

பத்திரிகைகளில் படித்த செய்தியை கண்ணெதிரில் கண்ட அதிர்ச்சியோடு அவர்கள் அவசரமாகப் புறப்பட்டனர். அப்போது-

ஒரு பெருங் கூட்டம் டைரக்டர் கர்ணன்சென்ற காரைச் சூழ்ந்து கொண் டது. சரமாரியாக கற்கள் வீசப்பட்டன. காரின் மீது சிலர் பெட்ரோலைஊற்றிக் கொளுத்த முயற்சித்தனர் உயிருக்கு ஆபத்தான இந்த பயங்கர சந்தர்ப் பத்தில் எங்கிருந்தோ ஒரு போலீஸ் வேன் வந்தது. கிளர்ச்சிக்காரர்கள் ஓடி விட்டனர்.

டைரக்டர் கர்ணன் குழு வினரை நகரத்திற்கு வெளியே பாதுகாப்பாகக் கொண்டு போய் விட்டு விட்டு போலீசார் சென்ற னர். இப்படி பல இன்னல் களைக் கடந்து ராஜஸ் தானில் படப்பிடிப்பை நடத்திவிட்டு உயிர் தப்பி வந்திருக்கிறார் டைரக்டர் கர்ணன்.

இந்தப்படத்தில் சுமன், மதன் குமார், மோகனப் பிரியா, சுவேதா, கங்கா ராமகிருஷ்ணன், நடரா ஜன், வசந்தா ஆகியோர் நடிக்கின்றனர். மா. ரா. வசனம் எழுதுகிறார். சங்கர் கணேஷ் இசை யமைக்கின்றனர். திரைக் கதை ஒளிப்பதிவு டைரக் ஷனை கர்ணன்கவனிக்கிறார்



'சபாநாயகன்' இதழின் 5 வது ஆண்டு விழாவில் கலந்துகொண்ட சபாநாயகர் க. இராசாராம், டி. வி. என். சமரசம் எம். எல். ஏ. ரேணுதேவி, டி. என். சிவதாணு